# இருவினை

நல்வினையுந் தீவினையு முண்டு திரிதருஞ்
செய்வினைக்கும் வித்தாமுடம்பு—ஔவைக்குறள்.



அநேக நன்னூல்களின்
ஆசிரியராகிய,

ச. தா. மூர்த்திமுதலியார்.
செய்தது.



கிருஷ்ணாஸ் எலக்ட்ரிக் அச்சேந்திரசாலையில்
பதிப்பிக்கப் பட்டது.

1918.

௨.

# இருவினை.

## நல்வினை — தீவினை.





னை என்றால் செயல், கிரியை, கருமம் என்றும் பல பெயர் கொண்டு காரியத்தைக் குறிப்பிடா நிற்கிறது. காரியம் இரண்டு வகையினதாகும். அதாவன:-நற்காரியம்—தீக்காரியம், நல்வினை—தீவினை. நல்வினை உண்டாய பொழுதே தீவினையும் அதனுடன் தொக்கி யிருந்ததாயிற்று. இவை யிரண்டும் பிரகிருதி தோன்றியதிலிருந்து உள்ளனவாகையினால், ஆன்மாக்களின் ஊழ் என்றும் ஊழ்வினை என்றுங் கூறாநிற்கிறார்கள். ஏனெனில்? இவ்வினையின்சார்பாகவே யாதொரு தேசோன்மயமாய் விளங்குறும் ஆன்மாவுக்கு சரீரமென்னும்படியான சட்டும், அச்சரீரத்துக்குள் கட்டுப்படுத்தப்பட்ட சுவேச்சை யிழந்த வாழ்வும் ஏற்படா நிற்கின்றன.

இங்கே ஒரு விஷயம் கவனிக்கற்பாலதாம். தேசோன்மயமாய் விளங்குறும் ஆன்மாவுக்கு அது ஆதியில் யாதொரு வினை புரியாமலிருந்தும், எங்ஙனம் சரீரபந்தம் ஏற்பட்டது என்னும்படியான கேள்வி பல்லோராலும் பிறப்பிக்கப்படுகிறது. இக்கேள்விக்கு விடை பலவிதங்களில் கூறப்படுகிறது. ஆனால் இதற்கு ஒரே ஒரு விடைதான் உண்டு. அதாவது ஆன்மாக்கள் என்றுமே பரம்பொருளின் அஸ்தவிசேடத்தில் கருவிமாத்திரமாகவே யிருந்து விளங்குகின்றன. அப்படி

யுள்ள ஆன்மாக்களை, முதற்கண் அவைகள் யாதொருவினை புரியாமலிருக்க சரீரபந்தத்துக்குள் ஏன் புகுத்தப்பட்டன வென்றால்? அவ்வாறு புகுத்தப்பட்டது ஈஸ்வரனுடைய திருவிளையாடலாகும். அவ்விதமா யமைக்கப்பட்ட சரீரம் பரிசுத்தத்தின் மயமாகவேயுள்ள பரம்பொருளின் இச்சாமாத்திரையினாலாகையினால் அது புண்ணிய சரீரமாகின்றது. ஆனால் சரீரத்துக்குள் கட்டுப்படுத்தப்பட்டதும் ஆன்மா, ஆணவம், கன்மம், மாயை என்று சொல்லக்கூடிய மும்மலங்களில் சிக்கிக்கொள்ளத் தலைப்படுகின்றது. இவ்விதம் சிக்கிக்கொண்டதன்பிறகு தாமெடுக்கும் பிறவிக்கு தன்னுடைய வினையே ஊழாக ஏற்பட்டு, நல்வினைக்கேற்ப நற்பிறவியையும், தீவினைக்கேற்ப தீயபிறவியையும் எடுக்கா நிற்கிறது. யாதொரு தேசோன்மயமாய் விளங்கிய ஆன்மாவுக்கு திருவிளையாட்டினால் சரீரபந்தத்தையளித்த பரம்பொருள் ஆன்மாவை அதன் வழியே போக விட்டுவிடுகிறாரோ என்றால்? அப்படியுமல்ல. பலதேகதத்துவங்களில் தாமும் ஒரு தத்துவமாயிருந்து அவ்வான்மா நல்வினை செய்யவே நோக்கு கொண்டு அவ்வினை புரியத்தூண்டுதல் செய்யா நிற்கிறார். இத்தத்துவத்திற்கே ஈஸ்வர தத்துவமென்று சொல்லுகிறதுண்டு. நாம் நம்முடைய மனமறிந்த குற்றம் செய்யவோ அல்லது அவ்விதஞ் செய்த குற்றத்தை மறைக்கவோ முயலுங்காலையில் அப்படிச் செய்வது சரியல்லவென்று நமக்குள்தானே யிருந்து ஒருவிதமான போதனை எழக்காண்கிறோமல்லவா? அவ்விதமான போதனை வரும் இடமே ஈஸ்வர தத்துவம் தங்கி நிற்கும் இடமாம். இதற்கே மனச்சாட்சி என்று வேறொரு பெயரும் உண்டு. ஆனால் சரீர பந்தத்துட்பட்ட மாத்திரத்திற்றானே ஆன்மாவானது தன்னை யோர் தனித்த பதார்த்தமாகவும், தன்னால் ஆகாதது ஒன்றுமில்லை யென்றும், தானே யாவுமெனவும் நினைத்துறவாகிறது. தன்னைத் தனிப்பதார்த்தமாக எண்ணுவதினாலே ஆணவ மலசம்பந்த முறுகிறது. தன்னால் ஆகாதது ஒன்றுமில்லை யென்று எண்ணுவதினால் கன்ம வச

முறுகிறது. தானே யாவும் என்றுன்றுவதினால் மாய்கை யின்பாற் படுகிறது. இம்மூன்று மலங்களின் சம்பந்தப் பட்ட தோஷத்தினால் தனக்கு மேற்பட்டதாகிய பரம்பொருளை அறவே மறந்து தன்போக்கில் வினைபுரியா நிற்கிறது. அவ்விதம் புரியும்படியான வினையில் நல்வினையும் தீவினையும் நிகழ நல்வினைக்கேற்ப நற்பதவியையும், தீவினைக்கமைய தீய பிறவியையும் எடுக்கநேரிடுகிறது. ஆகவே முதல்முதலாக ஆன்மாவுக்கு தேக மமைக்கப்படுவது கடவுளின் திருவிளையாடலினால் என்றும், அதன்பிறகு ஏற்படும்படியான தேகங்கள் ஆன்மாவினுடைய சொந்த கிரியைகளினாலென்றும் விளங்கக்காணலாம்.

இனி, இந்த நல்வினை தீவினை யென்னும்படியான வினைகளுக்கே பாசம் என்னும் மற்றொரு பெயர் உண்டு. யாதொரு பதிமயமாயுள்ள ஆன்மா, பாசமென்னும் வினையின்பாற்படு மேல் அதனால் கட்டுப்பட்டு பசு என்னும்படியான பெயர் பெறுநிற்கிறது. ஆகவே தேகமாகிய சரீரத்தைக் கொண்டு வந்து சேர்ப்பது வினையாகவே இருக்கிறது. ஓர் சரீரத்துள்ளிருந்து புரிந்த நல்வினை தீவினைக்கமைய வேறோர் சரீரமெடுத்து அச்சரீரத்திலிருந்து அவ்வினைகளின் பயனாக உள்ளவைகளை அனுபவிப்பது மல்லாமல் மீட்டும் எடுத்த சரீரத்திலிருந்துகொண்டு வினைபுரிய, அவ்வினைகளுக்கமைய பிறிதோர் தேகமெடுக்க இப்படியாக மாறிமாறி வரும்படியான செயலுக்குட்பட்டதாகும். ஓர் தேகத்திலிருந்து இயற்றிய நல்வினை தீவினைகளுக்கமைய வேறோர் தேகமெடுத்து அவ்வினைகளின் பயனை யனுபவித்துக்கொண்டு வருகையில் அவ்வினைகளுக்கேற்பட்ட பயன் முடிவுபெற்றதும் முற்புரிந்த வினைகளின் சார்பாக எடுத்த தேகம் மாயா நிற்கிறது. இது நம்முடைய சொந்த கற்பனையன்று. ஆன்றோர் அனுபவமாய்க் கண்டறிந்து நம்முடைய நன்மைக்காக உபதேசித்துப் போன

தாகும். பட்டினத்தடிகள் இவ்விஷய வுண்மையை இவ்வண்ணம் வெளியிட்டுள்ளார் :—

வினைப்போகமே யொருதேகங்கண்டாய்! வினைதானொழிந்தால்
தினைப்போதளவு நில்லாது கண்டாய்! சிவன் பாதநினை!
நினைப்போரை மேவு! நினையாரை நீங்கு! இந்நெறியினின்றால்
உனைப்போலொருவருண்டோ மனமே! எனக்குற்ற துணை.

இப்பாட்டு அடிகள் தம்முடைய மனதை விளித்து உபதேசித்ததாகும். 'வினைப்போகமே யொரு தேகம் கண்டாய்' என்றார். முற்பவத்தில் புரிந்த இருவினைகளையும் அனுபவிக்கற் குற்றவிடமே ஒரு சரீரமாயமைந்தது. 'அவ்வினைதானொழிந்தால் தினைப்போதளவும் நில்லாது கண்டாய்' அவ்வினைகளின் பயனா யெழுந்த பலன்கள் அனுபவிக்கப் பட்டமேல் ஒரு தினையளவு நேரந்தானும் தாமதிக்காமல் எடுத்த சரீரம் விழுந்துவிடும் என்ற மெய்யுரையைக்கவனித்து நோக்குங்கால் உண்மை விளங்காமற்போகாது. இவற்றிலிருந்து, தேகம் சித்திப்பதே வினையின் சார்பினாலென்றேற் படுகிறது. வினை இரண்டு தன்மையுடையதா யிருக்கிறபடியால் நல்வினைக்கேற்ப நல்லதேகமும் எனவே உயர்பிறப்பும் தீவினைக்கேற்ப கெட்டபிறவியும் சித்திப்பதாகின்றன. ஆனால் பல கீழ்ப்பிறவிகளி லிருந்து நல்வினை புரிந்த பயனாகவே மனித ஜன்மம் கிடைப்பதாகின்றது. அப்படிக்கிடைக்கும் இவ்வுயர்ந்த பிறப்பைக்கொண்டு இன்னும் உயர்ந்த பிறப்பையோ, (தேவாம்சத்தையோ) அல்லது மேலும் பிறக்காமலிருப்பதற்கான வழியையோ தேடவேண்டியதை மறந்து கீழ்நோக்கிப் போகுங்கொடுமை மிக்க பரிதபிக்கக்கூடிய சம்பவமாம்.

இனி, நல்வினை தீவினை என்பவைகளின் பலன்களை விளக்க வந்த பொழுது தமிழ் மூதாட்டியார் கீழ்க்காட்டிய வண்ணம் இசைத்தனர்.

புண்ணியமாம் பாவம்போம் போனநாட்செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்த பொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை யெச்சமயத்தோர் சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.

இதிலிருந்து விளங்குவ தென்னெனில்? புண்ணியம் என்று சொல்லும் நல்வினை ஒருவனை ஆக்கற்குரியது அதாவது உயர்வுபடுதற்குரியது. பாவம் என்று சொல்லும் தீவினை ஒருவனை முன்னேற்றிவைக்காது அழித்தற்குரியது. சென்ற காலத்தில் செய்த அந்தந்தப் புண்ணிய பாவங்களே இவ்வுலகத்தில் பிறந்தவராகிய மனிதர்களுக்கு அநுபவிக்க ஏற்பட்ட பொருள்களாக அமைந்துள்ளன. ஆகையினால் ஆலோசிக்குமிடத்து எந்த மதத்தவர் சொல்லுவதும் நற்காரியம் நன்மை பயக்கும் தீக்காரியம் தீமை பயக்கும் என்னும் இவ்வுண்மைகளைத் தவிர்த்து வேறு புதிதான விஷயமன்று. இதை உன்னி தீமையை நீத்து நன்மையையே யாவரும் செய்யக்கடவர் என்றபடியாயிற்று.

இவ்விஷயத்தை இன்னும் தெளிவாக விளக்குவாம். பரமபத சோபானபட மென்னும்படியான பாம்புகளையும் ஏணிகளையும் சித்திரத்திலுடைய ஓர் மகளிர் விளையாட்டுப் படமுண்டே, அதை யெடுத்துக்கொள்ளுவாம். அப்படத்தில் அநேக சட்டங்கள் இருக்கக் காண்கிறோம். சட்டங்கள் சிலவற்றுள் ஏணியின் அடியும் முடியும் சிலவற்றுள் பாம்பின் தலையும் வாலும் இருக்கப்பார்க்கிறோம். பாம்பின் தலை யிருக்கும் சட்டத்தில் சோழிகை வருமேயானால் உடனே அந்தச் சோழிகை அப்பாம்பின் வால் இருக்கும்படியான சட்டத்திற்கு இறக்கிவிடப்படுகிறது. ஆனால் ஏணியின் அடி யிருக்கும்படியான சட்டத்திற்குச் சோழிகை வருமேயானால் அது அந்த ஏணியின் முடி யிருக்கும்படியான சட்டத்திற்கு ஏற்றப்படுகிறது. பாம்பின் தலைகளும் அவைகளின் வால்களும்

இருக்கும்படியான கட்டங்களில் முறையே உலகினர் ஒறுக்க வேண்டிய செயல்களும் அவைகளை ஒறுக்காது கைக்கொள்ளுவதனால் ஏற்படக்கூடிய தீவினைப்பயன்களும் காட்டப்பட்டிருப்பதுடன், ஏணிகளினுடைய அடிகளும் அவைகளினுடைய முடிகளும் இருக்கும்படியான கட்டங்களில் முறையே உலகினர் கைக்கொள்ளக்கூடிய நல்விஷயங்களும் அவைகளின் பயன்களா யேற்படக்கூடிய பதவிகளும் காட்டப்பட்டிருக்கின்றன. இந்த விளையாட்டை அதன் கருத்தின்னதென்றறியாமலே பலர் விளையாடி வருகின்றனர். ஆனால் இது வெகு யூகத்தன்மையோடு அமைக்கப்பட்ட படமாகும். இந்தப்படமும் அதை யொட்டிய விளையாட்டும் நம்முடைய நாட்டினதன்று. மேனாட்டவர்களால் விளையாடப்பட்டுவந்த "பாம்புகளும் ஏணிகளும்" என்று சொல்லும்படியான ஒரு விளையாட்டை நமதுநாட்டிற்கியைந்தவிதமாக அமைத்துக்கொண்டதாகும். அப்படி யமைக்கவந்தபொழுது நம்முடைய நாடு எப்பொழுதும் புண்ணிய பாவங்களில் ஈடுபட்ட நாடாகையால் பல உயர்ந்த பாடங்களை அதனுட்புகுத்தி யமைத்தனர். நிற்க. இந்த விளையாட்டில் ஏணியின் அடியிருக்கும்படியான கட்டத்தை யடைந்த சோழிகை அக்கட்டத்திலிருந்து அந்த ஏணியின் முடியிருக்கும்படியான கட்டத்துக்கு ஏறப்படுவது போல, அக்கீழ்க்கட்டத்தில் காட்டப்பட்டிருக்கும் நல்வினையில் ஒருவன் ஈடுபட்டு நிற்பானேயானால் அவ்வினையின் பயனைப் மேல் கட்டத்தில் காட்டப்பட்டிருக்கும் பயனை அநுபவிப்பவனாவான். இதேபிரகாரம் பாம்பின்தலையுள்ள கட்டத்தை யடைந்த சோழிகை அக்கட்டத்திலிருந்து அந்தப் பாம்பின் வாலிருக்கும்படியான கட்டத்திற்கு இறக்கிவிடப்படுவதுபோல, அம்மேல் கட்டத்தில் காட்டப்பட்டிருக்கும் தீவினையை ஒருவன் சார்ந்து நிற்பானேயானால் அவ்வினையின் பயனைக் கீழ்க்கட்டத்தில் காட்டப்பட்டிருக்கும் பயனை அநுபவிப்பவனாகிறான். இவ்விளையாட்டில் இன்னொருவிஷயமும் கவனிக்கற்பாலதாம். அதாவது மேற்கூறியவண்ணம் உயர்வும்

தாழ்வும் சோழிகைக்கு எதனல் ஏற்படுகிறதென்ருல் பாச்சிகைகளை வீசியெறிவதனல் உண்டாகும் எண்களினல். பாச்சிகை இரண்டாகும். இவ்விரண்டும் நல்வினை தீவினை யென்று சொல்லும் இரண்டு வினைகளையே குறிப்பிடுவனவாகும். அவைகளை வீசியெறிவதனல் ஏற்படும் எண்கள் வாழ்நாட்களைக் குறிப்பிடுவனவாகும். ஏணியின்வழியாய் உயர்ந்த கட்டத்தை யடைந்த சோழிகையும் பாம்பின் வழியாகக் கீழிறங்கிய சோழிகையும் அது ஏறிய அல்லது இறங்கிய கட்டத்தில் நெடுநேரம் இருக்காது. ஆனல் உடனே அடுத்த ஆட்டத்தில் அதனினும் உயர்ந்த கட்டத்தையோ அல்லது தாழ்ந்த கட்டத்தையோ அடையா நிற்கும். இதுபோலவே பாவவினை புரிந்து கீழ்மையுற்ருேன் அக்கீழ்மையான நிலைமையிலேயே என்றும் இருக்க அமையாது. அப்படியே புண்ணிய வினை யியற்றி உயர்வடைந்தோன் அவ்வுயர்ந்த பதவியில்தானே இருக்கவும் அமையாது. ஜீவராசிகளெல்லாமும் அதனதன் வினைவழியினலேயே அளக்கப்பட்டு அவைகளுக்கு உயர்வும் தாழ்வும் ஏற்படுகின்றன வாகையினல், ஜீவவருக்கங்களில் உயர்ந்த ஸ்தானம் பெற்றுள்ள மானுடர் அப்பதவியைப்பார்க்கிலும் மேலான பதவி பெறுவது வினை இரண்டில் நல்வினைச்சார்பினல் என்பதை அறிந்துள்ளபடியால் நல்வினை யொன்றையே கைப்பிடித்து மேலானபதவியையடைய முயற்சி செய்யவேண்டும். இங்ஙனஞ்செய்யாமல் தீவினையியற்றி, மனிதப்பிறவி யெடுத்தும், உயர்வடைய வழியேற்பட்டிருந்தும், அவ்வழியாகச் செல்லும் வகையெல்லாம் அறிந்திருந்தும், அவ்வழிவகைகளை விட்டுப்போட்டு கீழிறங்கிப்போதல் எவ்வளவு பரிதபிக்கக்கூடிய சம்பவமாகும் கவனியுங்கள். !

மேற்காட்டிய ஏணியின் சம்பந்தமாகக் கவனிக்கக்கூடிய விஷயம் வேருென்றும் உண்டு. ஏணி உயர்ந்த ஸ்தானத்தை அடைவதற்குச் சாதகமாகிய ஒருபொருளாக இருப்பதுமல்

லாமல் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து கீழிறங்குவதற்கும் ஏற்பட்ட சாதகமா யிருக்கிறது. ஏணியானது இரண்டு நீண்ட சட்டங்களை ஆதாரமாகக்கொண்டு பல படிகளை யுடையதாக இருக்கிறது. இவ்விதமாயமைந்துள்ள இந்தப்பொருளுக்கும் பிறவிக்கும் உள்ள ஒற்றுமையைச் சற்று விசாரணை செய்து பார்ப்போம். ஏணியிலுள்ள இரண்டு நீண்ட சட்டங்கள் நல்வினை தீவினை என்று சொல்லக்கூடிய இரண்டு வினைகளையும், படிகள் பலபிறவிகளையும் ஒத்துநிற்கின்றன வென்னலாம். பிறவிக்கே காரணமாயுள்ளது இருவினைகளென்பது மேலே எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. நல்வினை உயர்பிறவியையும் தீவினை தாழ்பிறவியையும் அளிக்கா நிற்கின்றன வென்பதையும் காட்டினோம். இனி, பிறவியானது, ஏணியின் அடிப்படியுற்ற ஓர் ஆன்மா அப்படியிலிருந்து நல்வினைபுரியுமேயானால் அதற்கு மேற்பட்ட ஒருபடியையோ பலபடிகளையோ கடந்து மேலேறுகிற்கிறது ; அப்படி யல்லாமல் தீவினைபுரியுமேல் அப்படியில் தானே இருக்க நேரிடும். இனி பல படிகளின்மேலேறிய மேல் தீவினைபுரியுமேல் கீழ்நோக்கிய படிகளை அடைய நேரிடும். பிரபஞ்சத்திலுள்ள பல பிறவிகளில் ஓர் ஆன்மா ஒரு பிறவியிலிருந்து நல்வினை புரிந்து உயர்வடையுங்காலையில் அப்பிறவிக்கு அளந்துவிடப்பட்ட இறுதிநாள் முடிய மீட்டும் பிறவி யெடுக்கா நிற்கிறது அப்படி யெடுக்குங்காலையில் முன் ஆயுள் இறுதி ஏற்பட்டு விடப்பட்ட படியிலிருந்தே மேல் நோக்கி ஏறிச்செல்லவோ அல்லது கீழ்நோக்கி இறங்கிச் செல்லவோ அமையும். இச்சம்பவத்திற்கே விட்டகுறை தொட்டகுறை என்று சொல்லுகிறதுண்டு. முன் (முற்பவத்தில்) விடப்பட்ட இடத்திலிருந்து தொட்டுக்கொண்டு மேற்போதலுக்கே இம்முதுமொழி உபயோகப்படுத்தப் படுகிறதுண்டு. இவ்வுரையில் உபயோகப் படுத்தப்பட்டிருக்கும் "குறை" என்னும் பதம் உயர்ந்த—ஞான மார்க்கமான—விஷயத்தை வெளியிடா நிற்கிறதென்னலாம். குறை என்பது முற்றுப் பெறவேண்டி யிருக்கும் ஒரு காரியம் முற்றுப்பெறு

மல் நின்றதாகும். அப்படி பிறவிச்சம்பவத்தில் முற்றுப் பெறவேண்டியதென், முற்றுப்பெறுமல் குறைவாக நிற்ப தென்னெனில்? கூறுதும். பிறவியை அதாவது சதா பிறந்துறும்படியான சம்பவத்தை யொழிப்பதே முற்றுப்பெற்ற செயலாம். அவ்வாறுகாமல் மீண்டும் மீண்டும் பிறந்துறும் படியான சம்பவமே குறையாகும். இந்தக்குறை எப்பொழுது பிரமாததன்மையில் நேரிடுகிறதென்றுல்? மானிடப்பிறவி யிலேயே என்னலாம். பிறவிகளில் அதிக சிறந்த பிறவி மானுடப்பிறவியேயாகும். இப்பிறவி எப்படி கிடைத்ததென்றுல், பலகீழ்ப்பிறவிகளில் பிறந்துற்றபொழுது நல்வினைபுரியா நிற்க பலபடிகளை மேல்நோக்கி ஏறிக்கொண்டேபோய் இப்பிறவி சித்தித்ததாயிற்று. இப்பிறவியில் மற்றப்பிறவிகளில் ஏற்பட்டிருந்த சம்பவங்களைப்பார்க்கிலும் விசேஷ சம்பவம் ஒன்றுண்டு. மற்றப்பிறவிகளுக்கு ஏற்பட்டிருப்பவை என்னெனின், ஒன்று மேல்நோக்கிப்போதல் மற்றென்று கீழிறங்குதல். மானுடப்பிறவியில் இந்த இருவித சம்பவங்களைப்பார்க்கிலும் விசேஷித்ததொன்று யாதெனின்? மேல்நோக்கிப்போதலோ அல்லது கீழ்நோக்கி இறங்குதலோ அல்லாமல் இனிப் பிறக்கும் அசம்பாவிதமே நிகழாமல் பிறவியை யொழித்துக் கொள்ளுவதும் ஆகும். இந்த மூன்றுவதும் முக்கியமானதுமாகிய சம்பவம் மற்றபிறவிகளுக்கும் ஏகதேசமாய் உண்டாயிருந்தபோதிலும் முக்கியமாய் மானுடப்பிறவிக்கே அது சிறப்புவகையினதாக அமைந்துள்ளது. ஆகையினுலேயே மானுடராகப்பிறந்தோர் தங்களுக்குக்கிடைத்த அபூர்வ சந்தர்ப்பத்தை இழந்துவிடாமல் பிறவியை யொழித்துக்கொள்ள வழிதேடவேண்டும். இந்த நோக்கத்தைக்கொண்டு நல்வினை புரிந்துவந்தால் அதற்கிடையில் இறுதி யடைந்தபோதிலும் கீழ்ப்பிறவி யெடாமல் மேல்நோக்கிப் போவதற்கான சம்பவம் ஏற்படும்.

பிறவிச்சம்பவம் தேவர்கள் உலகத்தில் தேவர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்திரனாகப் பிறப்பதாயிருந்தாலும் விரும்பக்கூடியதன்றாகும். இதனால்தான் மேலோர்களெல்லாம் பிறவியைப் பிணியென்றழைத்துச் சென்றார்கள். பிணியென்றமாத்திரத்தில் அதற்கு ஓர் பரிகாரமும் உண்டாயிருக்க வேண்டுமென்பதாயிற்று. பரிகாரமில்லாத பிணியும் கிடையாது. பரிசரிக்க முடியாத பிணியும் கிடையாது. அப்படியிருக்க பிறவியென்று சொல்லும்படியான இந்தப்பிணிக்கும் பரிகாரம்—மருந்து—இல்லாமலிருக்காது. இந்தப்பிணிக்கும் முன்னோர்கள் மருந்து கண்டுபிடித்து வைத்துப்போயிருக்கிறார்கள். அம்மருந்து யாதெனின்? அது ஓர் சிறந்த மருத்துவ சிரேஷ்டரால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. பலருடைய நன்மையை உத்தேசித்து அதைக் கீழே வரைகிறோம்.

பிறவாதிருக்க வரம்பெறல்வேண்டும் பிறந்துவிட்டால்
இறவாதிருக்க மருந்துண்டுகாண் இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்
மறவாதிருமனமே அதுகாண் நன்மருந்துனக்கே.

இது ஸ்ரீமத் பட்டணத்தெம்மடிகள் மஹா வாக்கியமாகும். அவரே மேலே கூறிய சிறந்த மருத்துவராவர். இதை யாராய்ந்து பார்ப்பாம். பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும் என்றார், அதாவது பிறவாமலிருக்கும் வரம் பெறுகையே தகுதி யுடையதாகும், (ஆனால்) பிறந்துவிட்டால்—பிறந்துவிட்டாலோ, இறவாதிருக்க—இறவாமற்படி யிருக்க, மருந்துண்டு-மருந்து இருக்கின்றது, காண்-அறிவாயாக. இது எப்படியோ-இது எப்படி என்றாலோ, அறம் ஆர்-தருமமார்க்கம் நிறைந்திருக்கிற, புகழ்-புகழையுடைய, தில்லை அம்பலவாணர்-தில்லையிலுள்ள அம்பலவாணருடைய, அடிக்கமலம்-தாமரை போன்ற பாதத்தை, மறவாது இரு-மறவாமலிருக்கக்கடவாய், மனமே-என்நெஞ்சே, அது-(அப்படி) மறவாதிருக்கையே, உனக்கு நன் மருந்து-உனக்கு இறவாமைக் கேதுவாகிய நல்ல மருந்து.

இன்னொரு பக்தசிரோமணி—முத்துத்தாண்டவர்—இம் மருந்தின் அருமையைப்பற்றி கீர்த்தனை ரூபமாக இவ்வண்ணங் கூறியுள்ளார் :—

இராகம்-மோகனம்—ஏகதாளம்.

பல்லவி.

அருமருந்தொரு தனிமருந் தம்பலத்தே கண்டேனே.

அநுபல்லவி.

திருமருந்துடன் பாகமருந்து தில்லையம்பலத்தாடுமருந்து
இருவினைகள் அறுக்குமருந்து ஏழையடியர்க்கிரங்குமருந்து. (அ)

சரணங்கள்.

கொன்றைதும்பை யணிந்தமருந்து-கோவைமீதிற் படர்ந்தமருந்து
மன்றுளே நின்றாடுமருந்து-மாணிக்கவாசகர் கண்டமருந்து (அ)

இந்திரரானவர் வானவர்தாமு மிருடிகள்தமக்கெட்டாமருந்து
சந்திரசூரியர் காணுமருந்து-தானேமுளைத்துத்தழைத்தமருந்து (அ)

தித்தித்தித்தி யென்றாடுமருந்து-தேவாதிமூவர் காணுமருந்து
கருத்தைத்திருத்தி யிருத்துமருந்து-காலனைக்காலால் உதைத்த
மருந்து (அ)

மேலே கூறிய—எடுத்துக்காட்டிய—மருந்து எவ்வளவு சிலாக்கியமான மருந்தென்பதை நீங்களே அறியவேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறோம். இதிலிருந்து விளங்குவதென்னவென்றால்? ஈஸ்வரனிடத்தில் சதா மனதைச்செலுத்திவந்தால் இறப்பு அறும். இறப்பு அறவே, அதனிடம் பிணைத்து நிற்கும் பிறப்பும் அறும். இரண்டும் அற்றால் நீண்ட சுகானந்தம் ஏற்படும் என்பதும், ஈஸ்வரனிடத்தில் நெஞ்சம் பற்று கொண்டிருந்தால் நல்வினை தீவினையாகிய இருவினைகளும் செய்யாமலிருக்க அமையும், அதனால் பிறப்பு இறப்புக்கே காரணமாயுள்ள இரண்டு வினைகளும் அற, அவை

களின் சார்பா பெழும்படியான பிறப்பு இறப்பாகிய இரண்டு சம்பவங்களும் அறமென்பதாயிற்று.

இனி, சில மஹான்கள் யாதொரு செயலுமற்று மவுனஞ் சாதிக்கத் தொடங்குவதின் காரணத்தைச்சற்று விளக்குவாம். அத்தகையோர் விட்டகுறையைத் தொட்டுக்கொள்ள வந்தவர்கள் ஆவர். முன் முற்றுப்பெறுவிக்க ஆயுள் நாள் போதாமல் மீண்டும் மானுடப்பிறவி யெடுக்க வாய்க்க, பழைய படிக்கு வந்ததும், பூர்வ உணர்ச்சி அவர்களுடைய ஞானத்தில் தட்டுப்பட உடனே அதுவரையில் தாங்கள் புரிந்துற்ற வினைக்காக பச்சாதாபமுற்று அப்பொழுதிலிருந்து மேலும் வினைபுரியாராகி தங்கள் வாய்கொண்டு பேசினாலும் யாது சம்பவிக்குமோ என அஞ்சியே மவுனம் சாதிக்கத் தொடங்குகிறார்கள். இவ்விதமாகிய உணர்ச்சி பலருக்குத் தங்கள் ஆயுள் நாளில் தட்டுப்படலாம். ஆனால் அவர்கள் அவ்விதமாகிய உணர்ச்சி தோன்றிய அபூர்வ சந்தர்ப்பத்தை மாய்கையின் வசத்தில் ஈடுபட்ட துர்ப்பாக்கியத்தால் இழந்துவிடுகிறார்கள் என்னலாம். இக்காரணத்தினாலேயே ஸ்ரீவாகீசப் பெருந்தகையார் பரமபதியை நோக்கி தம்முடைய திருவொற்றியூர்த்தேவாரமொன்றில் இவ்வண்ணம் விண்ணப்பித்துக்கொண்டனர்:—

மனமெனும் தோணிபற்றி மதியெனுங்கோலையூன்றிச்
சினமெனும் சரக்கையேற்றிச் செறிகடலோடும்போது
மதனெனும் பாறைதாக்க மறியும்போதறிய வொண்ணாத
உனையுறுமுணர்வை நல்காய் ஒற்றியூருடைய கோவே.

மனதையே தோணியாகச்செய்து, அத்தோணியை ஓட்டுங்கோலாக மதியையே ஆதாரமாகக்கொண்டு, சினமென்று சொல்லும்படியான சரக்கை அத்தோணியில் ஏற்றி, பிறவிப் பெருஞ் சமுத்திரத்தைக் கடக்கவெண்ணி ஓடும்பொழுது மாய்கை யென்னும் பாறையினிடமாக அத்தோணி மோத

நேரிடுமேல் திருவொற்றியூரிடங்கொண்ட பெம்மானே! உன்னையுணர்ந்துறுவதாகிய உணர்ச்சியை எனக்கு அனுக்கிரகஞ் செய்வாயாக என்றபடியாயிற்று. இதிலிருந்து விளங்குவதென்னென்றால், ஒவ்வொருவருக்கும் வினையைப் போக்கிக் கொள்ளுவதற்கான சந்தர்ப்பம் அபூர்வமாகத் தோன்றுறுமென்றும், அப்படித்தோன்றிய சமயத்தில் அவ்வெண்ணத்திற்குத்தடையாய் மாய்கை உடன் தோன்றி அவ்வித அபூர்வ எண்ணத்தை மறைக்குமென்றும், அப்பொழுது அம்மாய்கையாகிய சோதனையிலிருந்து தன்னைத்தப்பித்துக்கொள்ள ஈஸ்வரனுடைய அருளை நாடவேண்டுமென்பதும் வெளிப்படக் காணலாம்.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலாயத்திலிருந்தபொழுது அவருக்குப் பூமியிற்பிறக்கும்படியான சம்பவம் ஏற்பட அப்பொழுது ஈஸ்வரனை நோக்கி என்ன விண்ணப்பித்துக் கொண்டனர். "பிறவிக்குக் காரணமாகிய மாய்கையின் வசம் நான் அகப்படவிருக்கும் அந்தச்சமயத்தில் என்னைத் தடுத்தாண்டுகொள்ளவேண்டும்" என்றல்லவா? அவ்விதமாகத் தடுத்தாண்டுகொண்ட சந்தர்ப்பத்தில், சுந்தரர் தாம் முற்பவத்தில் யாவர் என்பதையும் பூமியில் அவதரித்த காரணத்தையும், தம்மை வழியடிமை யென்று சொல்லி வாது புரிந்தபொழுது, சுவாமிகள் உணர்வுகொண்டனரா? இல்லை. ஏனெனில்? அவர் தம்மை மறந்திருந்தனர். மாய்கையின் வசமுற்றிருந்ததனால் என்போம். மாயை மஹா வலிமையுடையதாகையினால் அது தன்வயப்பட்டோரை மேல்நோக்கிப்போக விடாமல் தடைசெய்து நிற்கிறது.

ஆகையாலிந்தமாயை யறிவினை முழுதுமூடித்
தேகமே யான்மாவென்றுஞ் சேயிழைமடவார் தக்கள்
போகமே மோட்சமென்றும் புந்தியைத் திரிவுபண்ணுஞ்
சோகம்பாவனையாலித்தைத் தொலைப்பர்கள் சீவன்முத்தர்.

என்று பதிபசுபாசவிளக்கநூல் அறையா நிற்கிறது. இவ் விதமாகிய மாயை ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளையே சற்று மயக்கியதென்றால் சாமான்யர்களை என்செய்யாதுபோம். இந்த மாய்கை ஒருவனைப்பிடிக்காம லிருப்பதற்கான உபாயந் தான் இல்லையோவென்றால்? உண்டு. அது ஒரேவழியில்தா னுண்டு. அவ்வழி யாதெனிலோ? மனதை இறக்கச்செய்யும் வழியாம். மனம் எப்படி இறக்குமென்றால்? அதை நாம் நம் முடைய வழியில் இழுத்துச்செல்லவும், அது தன்வழியில் நம் மை இழுத்துச்செல்லாமலிருக்கவும் ஆனவழிதேடிவிடவேண் டும். ஒருவன் வேறெல்லாவிதமான சித்திகளும் பெற்று மன மிறக்கக் கல்லானுபின் அவன் கற்ற சித்திகளினால் யாதொரு பிரயோசனமும் இன்றாக முடியும். இதனாலன்றோ நம் தாயு மானவசுவாமிகள்,

> சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
> மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

என்பதாக எடுத்துக்கூறினர். முன்னர் மேலே காட்டிய மாய் கையைப்பற்றிய மேற்கோளிலும் 'சோகம் பாவனையால் இத் தைத்தொலைப்பர்கள் சிவன்முத்தர்' என்று கூறியிருப்பதைக் கவனித்துப்பாருங்கள். சோகம்பாவனை யென்றது மௌன சமாதி கூடியிருத்தலே. 'மோனமென்பது ஞானவரம்பு' என் றதுபோல மௌனஞ்சாதித்தலானது ஞானத்தின் வரம்பைக் கைப்பிடித்ததுபோலாம். ஞானத்தின்முடிவே முத்தியாகை யினால் அதன்வரம்பைப்பற்றினால் முத்தியென்னும் இடத்திற் சேருதல் ஒப்ப முடிந்ததோர் உண்மையாக முடியும்.

பிறப்பை உண்டாக்குவது இருவினைகளே என்பதை இன்னும் சில மேற்கோள்களின் வழியாக ஆராய்ந்து பார்ப் போம்.

> முந்தஜன்மமாம் புண்ணியமிகுந்திடில் முக்கியமுண்டாகும்
> இந்தஜன்மமாம் பாவமேமிகுந்திடில் பெரியதோர் துயராகும்
> அந்தரண்டையும் அறத்திடில்பிக்கிலை யரன்கழல் துணையாகும்
> பந்தமானதோர்புராணங்கள் வேதங்கள்பகடத்ததையறிவாயே.

என்ற சிவானந்தபோத உபதேசத்தை யெடுத்துக்கொள்ளுவோம். முந்த ஜன்மம் ஆம் புண்ணியமிருந்திடில் முக்கிய முண்டாகும் என்றார். அதாவது முந்தியஜன்மத்தில் புண்ணியமியற்ற அதனுடைய வழிப்பயனாகவே இந்த மானிட ஜன்மம் கிடைக்கப்பெற்றோம், இனி இந்த ஜன்மத்திலும் புண்ணியம் மிகுந்து நிற்குமேயானால் இதனிலும் சிறந்த பிறவி யுண்டாகும், என்றதாயிற்று. இந்த ஜன்மமாம் பாவமே மிகுந்திடில், அதாவது இந்தஜன்மத்தில் பாவங்களையே மிகுந்துசெய்துற்றால், பெரியதோர் துயராகும், நினைக்கற்கே பயங்கரமாயுள்ள துன்பமுண்டாகும் ; எவ்வகையிலென்றால் ? பல கீழ்ப்பிறவிகளிலிருந்து புண்ணியமிகுதியால்கிடைக்கப்பெற்ற இப்பிறவியை யொழித்து மீட்டும் கீழ்ப்பிறவி யெடுப்பதினால் திரும்பவும் புண்ணியக்கிரியைகள் புரிந்து மானுடஜன்மம் எடுக்க நேரிடும்வரையில் அனுபவிக்க ஏற்படுவது துயரமே,—துயராகிய கடலே-யாகும். (ஆனால்) அந்த இரண்டையும் அறுத்திடில், புண்ணியம் பாவம் என்று சொல்லக்கூடிய இரு வினைகளையும் அறுத்துவிட்டால், பிக்கில்லை—எவ்விதமாகிய துன்பமும் இல்லை, அரன்கழல் துணையாகும், ஈஸ்வரனுடைய பாதமே துணையாகும். பந்தமானதோர், நல்வினை தீவினை யென்று சொல்லும் இருவினைகளே பிறப்பை வளர்க்கும் பந்தமாக இருப்பதை உன்னுவாய். புராணங்கள் வேதங்கள் படைத்ததை யறிவாயே, அவ்வித பந்தத்துள் கட்டுப்படா வகையையும், கட்டுப்படாதோர் அடைந்துற்ற பதவியையும், பந்தத்துள் அகப்பட்டுத்துன்பமுற்றோர் கதியையும் உலகத்தவர்களுக்குப் படிப்பினையாக அமைத்தெழுந்த வேதங்கள் புராணங்கள் கூறும் விஷயங்களை அறிவாயாக என்றபோதம் எவ்வளவு சிறந்த ஞானம் பயப்பதாக இருக்கிறதென்பதைப் பற்றி ஒவ்வொருவரும் அறியவேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருச்சுனனை நோக்கிக்கூறிய கீதா உபதேசத்தை இங்கே எடுத்துக்காட்டுவது அவசியமாகும்.

பகவான் வினைபுரியும்வகையைப்பற்றி அருச்சுனனுக்கு இவ் வண்ணங் கூறியருளினர் :—

இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையும்
மருவேனென்று அறவிட்டு மாயையினுன் மறைப்பரிய
ஒருவனையேபற்று தி அப்பற்றினுலுனைப்பிறவிக்
கருவேலைகடக்தேறக் கைதருவேன்கதிர்வேலோய்.

இந்த உபதேசத்தை ஊன்றிக்கவனியுங்கள். நல்வினை தீவினை யென்று சொல்லக்கூடிய இரண்டு வினைகளையும் கைக்கொள் ளேன் என்று சங்கற்பித்துக்கொண்டு அவ்வண்ணமே அவை களை விட்டுப்போட்டு, மாய்கையினுல் மறைக்கமுடியாத பரம் பொருளிடத்தில் உன்னுடைய நாட்டத்தைச் செலுத்தினுல் பிறப்பை வளர்க்கும்படியான பெரிய சமுத்திரத்தைத்தாண்ட என்னுடைய துணையாகிய கைகொடுத்து உதவிபுரிவேன் என்றபடியாயிற்று. இதிலிருந்து வெளியாவதென்னவென் ருல் ? இருவினைகளையும் விட்டொழித்து ஈசன்பாலதாய் ஒரு வன் தன்மனதைப்புகுத்தினுல் அவன் பிறவிப்பெருங்கடலை நீந்தமுடியுமென்னும் விஷயமேயாகும்.

ஆனுல் உலகத்தில் மானுடராகப்பிறந்தோர் வினைபுரியா மல் இருக்கமுடியுமோ? மேலும் தொழிற்கடமை ஒன்று உண் டல்லவா ? தன் கடமையைச் செய்யுங்காலையில் வினைபுரியத் தானே நேரிடும். இவைகளுக்கு என்ன சமாதானம் என்று கேட்க அமையும். இவைகள் தக்க கேள்விகளே. பகவா னும் அவைகளுக்குத் தக்க உபதேசங்கூறியுள்ளார்.

என்னைப்பற்றிக்கொண்டுநின்றே எல்லாவினையுமியற்றினுல்
பின்னைப்பிறவாப்பெரும்பதம் என்னருளினுலேபெறுவைகண்டாய்
நின்னைத்தொடரும்வினையெல்லாம் என்னைநினைந்தேசெயில்வினை
தன்னைக்கடத்தற்கருந்துன்பமெல்லாங்கடக்கத்தகுதியால். [கள்

என்ன அருமையான உபதேசம் கவனியுங்கள். என்னை ஆதாரமாகக்கொண்டு எல்லாவினையும் செய்தால் மீட்டும் பிறவாத பெரும்பதவி என்னருளினாலே நீ அடைவாய், என்னை நினைத்து செய்யப்படும் வினைகளினால் நீ பீடிக்கப்படமாட்டாய், அவைகளை யெல்லாம் கடந்த பதவியடைகுவாய் என்றனர். இவ்வுபதேசத்தில் கவனிக்கக்கூடிய முக்கியமான விஷயமொன்றுண்டு. என்னை ஆதாரமாகக்கொண்டு என்றதனால், பகவானை மனதினிடமாகச் சதாகாலமும் நினைவு கூர்ந்து நாம் எந்தக்காரியஞ் செய்தபோதிலும் அது நற்காரியமேயாகும். தீக்காரியம் அங்கே புகுவதற்காகாது. அவ்வித ஒழுக்கமுடையோன் கடவுள் அமிஸமாகவே விளங்குகிறவனுவானுகையினால் அவனுடைய மனதில் எழுவதெல்லாம் சுத்த சன்மார்க்க நெறியாகும். ஆனதினால் அவனுடைய மனதில் எழும் சுத்த சன்மார்க்க நெறியாகிய வினைக்கு யாதொருவிதமான பயனுமில்லாமல் அவனுடையமனம் ஈசன் பாலதாகவே இருக்குமாகையினால்,

என்னையே நினைந்தெழ உன்மனத்தினை என்னிடையேவை
என்னையே நினைந்திரு நீமற்றெனக்கே பூசனைசெய்
என்னையே குருவாக்கொள் எப்போதுமிதுசெயயில்
என்னையே வந்தடைதி இதுமெய்யே யிதுமெய்யே

என்ற பகவான் உபதேசமாகிய இதற்குச்சமானமாகும். என்னையே சதாகாலமும் உன் நினைவில் வைத்திருக்கவேண்டுமானால் உன்னுடைய மனதை என்னிடமாகவே வைத்திருப்பாய், என்னையே உன்னியிருப்பாய், எனக்கே பூசனைசெய்வாய், என்னையே குருவாகக்கொள்வாய், எப்பொழுதும் இவ்விதஞ் செய்துவந்தால் என்னைவந்தடைவாய் இது சத்தியம் இது சத்தியம், என்று என்ன விளக்கமாக எடுத்துபதேசித்துள்ளார் கவனியுங்கள். இதுதான் யோகசாதனையில் உயர்ந்த சாதனையாகும். ஈசன்பாலதாகவே ஒருவன் தன்மனதைச் செலுத்துவானேயானால் அவனிலும் அரியயோகி வேறெவனேனும் இருப்பானே யோசியுங்கள்.

எல்லோருமே—உலகத்திலுள்ள மானிடரெல்லோரும் இவ்விதமாக யோகசமாதியடைந்தார்றால் என்னாகும்? உலகம் இயங்குவதெப்படி? என்று கேட்கநேரிடும். நாம் பகவானுடைய உரைப்படியிலிருந்து ஒழுகவேண்டி கடமைப்பட்டுள்ளமையேயொழிய உலகத்தை இயங்கவைப்பது நம்முடைய செயலன்று. திரேதாயுகம் அல்லது சத்தியயுகம் என்று சொல்லும் காலவெளியில் இருந்த ரிஷிகள் எல்லோரும் இவ்விதமாகவே ஒழுகினோர்களல்லவா? திரும்பவும் உலகமாறுபாட்டில் அவ்விதமாகிய காலம் வராமற்போகாது. அதுவரையில் நாம் செய்யவேண்டியதென்னவென்றால் வினை இரண்டில் நல்வினையையே கைப்பிடித்து தீவினையையொழித்து பிறவியை யறவே ஒழித்துக்கொள்ள முடியாமற்போனபோதிலும் எடுத்துற்ற பிறவியிலிருந்து கிழிறங்காமல் இப்பிறவியையே மீட்டும் எடுப்பதற்கோ அல்லது இதனினும் உயர்ந்த—சிறந்ததாகிய—அம்ஸம் பெறுவதற்கோ ஆனவழி தேடவேண்டும். இதுவே அறிவுடைமையாகும்.

தன்மமதைச்செயல்வேண்டும் தண்டலைநின்றியாரே
தயவுசெய்வார்
வன்மவினைசெயல்வேண்டாம் பொய்வேண்டாம் பிறரை
யொன்றும் வருத்தல்வேண்டாம்
கன்மநெறிவரல்வேண்டாம் வேண்டுவது பலர்க்கும்
உபகாரமாகும்
நன்மைசெய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார் தீமைபெற்று
நலிவர்தாமே.

என்ற படிக்காசுத்தம்பிரானின் பழமொழிவிளக்க உரையைக் கைப்பிடிப்போமாக. இவ்வுபதேசம் எவ்வளவு சிறந்த படிப்பினையாக இருக்கிறது கவனியுங்கள். நன்மைசெய்தோர்கள் நலம்பெறுவரென்பதும், தீமை புரிந்தோர் தீமைபெற்றுத் துன்புறுவர் என்பதும் ஒப்பமுடிந்த உண்மையாகையினால், நீ செய்யவேண்டாதவை எவையெனில்? (1) வன்மவினை—பிறருடைய பதவி, ஐஸ்வரியம் முதலியவைகளைக்கண்டு பொறாமைகொண்டு, அத்தியகுண மேலீட்டினால் பிறருக்குத் திங்கு

நேரிடும்படியான வினை செய்யவேண்டாம். (2) பொய்வேண்டாம்—பொய்யானது அதையுடையோனுக்கும் பிறருக்கும் கெடுதி செய்விக்குமாகையினால் பொய் பேசுதலை யொழித்து விடவேண்டும். (3) பிறரை யொன்றும் வருத்தவேண்டாம்—பிறரை மேற்கூறிய இரண்டுவகையினாலல்லாமல் இன்னும் வேறெந்தவகையினாலும் வருத்தவேண்டாம். இங்கே, பிறர் என்றதை மனிதர்கள் மாத்திரமல்லாமல் எல்லா ஜீவராசிகளென்றும் கொள்ளவேண்டும். ஒருவன் அஹிம்ஸாபரனாக இருந்து விளங்கவேண்டுமென்று சொன்னபடி. (4) கன்மநெறிவரல் வேண்டாம்—மீட்டும் உனக்கு பிறவியைக்கொண்டு வந்து சேர்க்கும்வழி வரவேண்டாம் அவ்வழிவராமல் பாதுகாத்துக்கொள்ளவேண்டும் இவைகளை விலக்கிக்கொண்டு தன்மம் செய்ய எண்ணங்கொள்ளவேண்டும். தருமம் என்றால்- மானுடராகப்பிறந்த ஒவ்வொருவரும் தங்களுடைய வாழ்நாளில் ஒவ்வொரு பருவநிலையிலிருந்து செய்யவேண்டிய கடமை இன்னின்னவையென்று பெரியோரால் விதிக்கப்பட்டிருக்கும் வழியில் நின்று அதிலிருந்து எவ்வாற்றானும் விலகிவிடாமல் நடக்கவேண்டும். அப்படி நடந்தால் பலருக்கும் உபகாரமாகும், கடவுளும் தயவு செய்வார் என்றார், பிறர் பலருக்கும் உபகாரமாயிருக்குமென்றதனால் அத்தகையது தனக்கே பலநன்மைகளைக்கொண்டு சித்திக்கும் விஷயமாம் கடவுளும் தயவுசெய்வார் என்றதினால் மனிதனாகப்பிறந்த அத்தகையோன் தன்கடமையில் வழுவாமல் நடந்துகொள்ளும் வகையால் அவன் இகத்தில் ஜனசமூகத்தாரால் விரும்பிக் கொண்டாட, அப்படி செம்மைபெற நடந்துகொண்ட காரணத்தினாலே பரத்தில் கடவுளால் உயர்ந்தபதவி யளிக்கப்பெறுவான் என்பதில் ஏதும் ஐயப்பாடுண்டோ கவனியுங்கள்.

ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளும் இவ்வண்ணமே ஒருவன் பெறக்கூடியவை இன்னவை பெறக்கூடாதன இன்னவை என்பதைத் தம்முடைய தெய்வமணிமாலையில் ஒரு பாசுரத்தால் விளக்கியுள்ளார்—இடப்பொருத்தங்கருதி அப்பாசுரத்தை இங்கேயமைத்துக் கொள்ளுகிறோம்:—

ஒருமையுடனினது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர் தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்
பெருமை பெறு நினது புகழ் பேசவேண்டும்
பொய்மை பேசா திருக்க வேண்டும்
பெரு நெறிபிடித் தொழுக வேண்டும்
மதமானபேய் பிடியா திருக்க வேண்டும்
மருவு பெண்ணாசையை மறக்க வேண்டும்
உனை மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதி வேண்டும்
நோயற்ற வாழ்வுநான் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்
தல மோங்குகந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

இவ்விதமான உபதேசங்கள் நம்முடைய நாட்டில் பிறந்து கைம்மாறுகருதாது பல நன்மைகளை நமக்கு உதவிப்போன பல பெரியோர்களால் எண்ணிறகடங்காவிதத்தில் செய்யப்பட்டுப் போயிருக்கின்றன. அவைகளை யோதி உணராமலும், அவைகளின் வழி நின்றொழுகாமலும் காலத்தை நாம் வீணில் போக்கிக் கொள்ளுகிறோம். இது சரியன்று.

நல்வினை என்றுமே ஒருவனை நல்வழிக்காட்படுத்தும் தீயவினை தீமையையே கொண்டுவந்து சேர்ப்பிக்கும் என்பதை அறிந்திருந்தும் நாம் நல்வழிபுகாமல் இருப்பது மிக்க பரிதபிக்கக்கூடிய சம்பவமாகமுடியும். ஆகையினால் இதை வாசிக்கும் ஒவ்வொருவரும் இனியேனும் வினை இரண்டில் தீவினையை யொழித்து, நல் வினை யொன்றினையே கைக்கொண்டு இகத்தும் பரத்தும் நற்பயனடையவேண்டு மென்பதே எம்முடைய பெருநோக்கு. ஓம்—தத்ஸத்.

ச. தா. மூர்த்தி.

3510

## ச. தா. மூர்த்திமுதலியார், எழுதிய

## நவீனகங்களும் வியாசங்களும்.

---

1. கன்னம்மாள் அல்லது கண்டதும் காதல்.
2. நாகரத்தினம் அல்லது விஷக்குண்டூசி.
3. சிவகாமி அல்லது தப்பியோடிய பெண்.
4. தியாகராஜன் அல்லது நல்லொழுக்கசீலன்.
5. மாணிக்கவல்லி அல்லது கள்வர்கூட்டத்தைக் கலைத்த கட்டழகி.
6. அம்புஜவிலாசத்தின் அதிசயச்சம்பவம்.
7. நில அறையின் அதிசயம் அல்லது காணாமற்போன மாணிக்கம்.
8 கூடாவொழுக்கச் சகோதரன்.
9. அம்பிகாபதி அல்லது கம்பர் குமாரன்.
10. என் தந்தையார் (பக்திரச நூல).
11. அஸ்தபூஷணம் அல்லது அறன்கடை விலக்கு.
12. தபால்சரித்திர சாரசங்கிரகம்
13. நடராஜன் நாடகஞ் சென்ற சம்பவம்.
14. பதினாறுபேறு.
15. இல்லறம்.
16 பொது மகள்.
17. தவம்.
18. பலவகை மனிதர்.
19. அவதாரமகிமை.
20. அன்பு.
21. இருவினை.

எங்களிடத்தில் கிடைக்கும்.

நவீனகதா புத்தகசாலை.

(ஹெட் ஆபீஸ்)
111. மங்கமாரி வீதி,
இரங்கூன்.

(பிரான்ச் ஆபீஸ்.)
8, குளோ பஜார்சாலை,
சென்னை.